# உள்ளுறை உவமம் - அன்றும் இன்றும் ஒரு சிறு ஒப்பாய்வு

முனைவர் இரா. அருணா, மொழியியல் ஆய்வாளர், கோபிசெட்டிபாளையம்.
8870374019, 9095058279, arunatamilgobi@gmail.com

DOI No : 10.5281/zenodo.10507015

**ABSTRACT**

Ideas that seem obvious can be set up to become metaphors for ideas that are fundamentally frozen inside. This is called simile. One of the material states in which the inner phenomenon is specifically realized is called inner.

**KEYWORDS**

Poetic code - Sangam literature - Grammar

**வெளிப்படையாகத் தோன்றும் கருத்துக்கள் உள்ளே அடிப்படையாக உறைந்து கொண்டிருக்கும் கருத்துக்களுக்கு உவமையாக வரும்படி அமைக்கப் பெற்றிருக்கும். இதனையே உவமப்போலி எனப்படுகிறது. அக நிகழ்வை குறிப்பாக உணர்த்தப்படும் பொருள் நிலைகளில் ஒன்று உள்ளுறை எனப்படும்.**

**அகமரபு :**

தலைவன் தலைவி காதல் வயப்பட்டு பேசிக்கொண்டிருக்கும் போது நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்தும் உவமை மூலம் உணர்த்துவதே அகப்பாடல்களின் மரபாகவே அமைந்தது. எனவே தான் கூற வரும் காதல் நிகழ்வுகளை நூலார் உள்ளுறை உவமாக விளக்குவதால் அதன் சிறப்பு, வர்ணனை, இயற்கை நிகழ்வு அனைத்தையும் தெளிவாக விளங்க முடிகிறது.

சங்க கால அகப்பொருள் நூல்களில் நாம் ஆராய்ந்து பார்க்கும் போது அதில் தலைவன் தலைவியின் பெயர்களை வெளிப்படையாக கூறுவதில்லை என்பது புலப்படுகிறது. பெயருக்கு பதிலாக அந்நில மக்களுக்கு வழங்கப்படும் பொதுப்பெயர்கள் அதாவது நாடன்; ஊரன், வெற்பன், துறைவன், கொடிச்சி, கிழத்தி என்று அழைக்கப்படுவதை அறிகிறோம். இதனால் பெயர் கொண்டு அழைப்பதில் கூட உள்ளுறையாக அமைவதை காணமுடிகிறது.

**மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**

**சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறா அர்.**

**(அகத்திணை-நூற்57(இளம்))**

**தொல்காப்பியம் :**

1. அகவாழ்க்கை(இல்லறம்)யில் நிகழும் இன்ப நிகழ்வை உணர்த்தும் வகையில் அமைகிறது,
2. யார்-யாரிடம் உள்ளுறை உவமமாகக் கூறவேண்டும் என்பதையும்,
3. எந்தப் பொருளுக்கு உவமை உள்ளுறுவாக அமைய வேண்டும் என்று ஒரு வரையறையைத் தொல்காப்பியர் தொல்காப்பியத்தில் தெளிவாக விளக்கியுள்ளார்.

**உள்ளுறை உவமம் விளக்கம் :**

உவமம் என்றால் உவமேயம் கட்டாயமாக இருக்கும். ஆனால் உள்ளுறை உவமத்தில் உவமேயம் வெளிப்படையாக தெரியாது. இதில் உவமை போல எடுத்தியம்புகின்ற கருத்துக்கு இணையான கருத்தின் பொருளை சிந்தித்து அறிந்து கொள்ள முடிகிறது. இதனை தொல்காப்பியர்,

**உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென**

**உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்.**

**(அகத்திணை-நூற்பா51)**

**உள்ளுறை உவமத்திற்கு எடுத்துக்காட்டு :**

**“கோழிலை வாழைக் கோண்மிது பெருங்குலை**
**ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுக்க**
**சாரற் பலவின் சுளையோடு ஊழ்படு**
**பாறை நெடுங்சுனை விளைந்த தேறல்**
**அறியாது உண்ட கடுவன் அயலது**
**கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது**
**நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்**
**குறியா இன்பம் எளிதின் நின்மலைப்**
**பல்வேறு விலங்கும் எய்தும் நாட!”** **(அகம்-2)**

செய்யுளைப்படித்து அதன் பொருளை உணர வேண்டும். பிறதுதான் செய்யுளின் நிலையை விளங்கிக் கொள்ள முடியும். மேலே கூறப்பட்டுள்ள செய்யுளின் பொருள் இங்கு விளக்கப்படுகிறது.

**கோழ் இலை** – வளமான இலைகளையுடைய
**கோள்மிகு** – காய்த்தல் மிக்க
**ஊழ் உறு** – முதிர்ச்சியுற்ற
**உண்ணுநர்** – உண்போர்
**சாரல்** – பக்க மழை
**ஊழ்படு சுளை** – முற்றிய சுளை
**தேறல்** – தேன்
**கடுவன்** – ஆண் குரங்கு
**கறிவளர் சாந்தம்** – மிளகுக்கொடி படர்ந்த சந்தன மரம்
**ஏறல் செல்லாது** – ஏறதல் மாட்டாது
**நறுவி அடுக்கம்** – நறிய பூக்களாலாகிய படுக்கை

**கண் படுக்கும்** – தூங்கும்.

**பொருள் உணர்ந்து நிகழ்வை விளக்குதல் :**

இச்செய்யுளில் தலைவனின் வருத்தப்படக் கூடிய செயலை மறைமுகமாக(உள்ளுறை) கருத்துக்களை வெளிப்படையாக தலைவனின் நாட்டை வாழ்த்தைப் பாடுவது போல் கூறுதே ஆகும். இச்செய்யுளின் ஒவ்வொரு அடியிலும் உள்ளுறை உவமம் அமைந்துள்ளது.

**களவு ஒழுக்கம் :**

கனிகள் நிறைந்த குறிஞ்சி நிலத்தை, தான் கூறவரும் கருத்திற்கு உள்ளுறை உவமையாக எடுத்தியம்புகிறாள் தோழி.

தலைவன் தலைவியிடம் அன்பு செய்வதைத் தவிர்த்து வேறொரு பெண்ணைத் தன் தலைவியாகப் பாவித்து வாழ்வதைக் களவு ஒழுக்க நிலை என்பதைச் செய்யுளார் கூறும் போது

**களவு ஒழுக்க நிலை**

இதனால் தலைவியின் நிலையைத் தோழி தலைவனிடம் மறைமுகமாக உணர்த்தும் படியும் அமைவதை விளக்குகிறது. அதே சமயம் தலைவனின் தவறை தோழி நேரடியாகக் கூற இயலாதவள். எனவே தன் கூற்றின் வரையறை அறிந்து கூறுவதற்காக உள்ளுறை உவமத்தைப் பயன்படுத்தியுள்ளாள் தோழி.

**பொருளோடு ஒத்த உவமை (மறைபொருள்) :**

- பேச்சில்வாழை பலா தேன் சந்தன மரம் போன்ற குறிஞ்சி நிலத்தின் மரங்களின் பழங்களிலிருந்து சிந்தும் தேன் பள்ளத்தில் நிரம்பதி வழிவது ஸ்ரீ பரத்தியர் மிக அழகாக எளிதில் தன்வயப்படுத்தும் திறமை மிகுந்தவளாக இருப்பாள் என்பதற்கு ஒப்புமையான கருத்து மறைந்துள்ளது.

- ஆண் குரங்கு தான் மரம் ஏறும் தொழிலை செய்யாமல் பள்ளத்தில் நிரம்பியுள்ள தேனை உண்டு பூக்களின் மேல் மயங்கிக்கிடப்பது ஸ்ரீ தலைவன் தலைவியை மறந்து பரத்தியிடம் களவு வாழ்க்கை வாழ்வதை எடுத்தியம்புவதாக அமைந்துள்ளது.

**ஆண் குரங்கு (கடுவன்) நிலை = தலைவன் நிலை**

**உள்ளுறை உவமத்தால் ஏற்படும் பயன் :**

**மறைமுக மருந்து**

வெளிப்படையாக எடுத்துக் கூற இயலாத கருத்துகளை அல்லது செயலை அறிய வைக்க மறைமுக மருந்தே உள்ளுறை உவமம் ஆகும்.

**உள்ளுறை உவம வகை :**

ஐந்து வகை உள்ளுறை உவமமாக தொல்காப்பியர் தனது பொருளதிகாரத்தி;ல் தொல்காப்பியம் மூலம் உணர்த்துகிறார்.

**“உவமப் போலி ஐந்து என மொழிப” (உவமைஇயல்-நூற்பா24)**

1. வினையுவமப்போலி
2. பயனுவமப்போலி
3. உறுப்புவமப்போலி அல்லது மெய்யுவமப்போலி
4. உருப்போலி
5. பிறப்புவமப்போலி

இவ்வகை உவமப்போலிகளில் வினை உள்ளுறை உவமத்தை எடுத்துக்காட்டாக இங்கு காண்போம்.

**“கரும்புநடு பாத்தியில் கலிந்த தாமரை**

**கரும்புபசி களையும் பெரும்புன லூர**

**புதல்வன் ஈன்ற எம் முயங்கல்**

**அதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே”** **(ஐங்.65)**

மருதத்திணை கருப்பொருளை வெளிப்படையாகக் கூறி அதன் மூலம் தலைவியின் நிலையைத் தலைவனுக்கு உணர்த்துவதாக இச்செய்யுளின் விளக்கம் அமைகிறது.

கரும்பு விளைவிக்க அமைத்த பாத்தியில் தாமரைதானே இடையில் புகுந்து பூத்துள்ளதை ஆண் வண்டு தேனை உண்டு பசியைத் தீர்த்து கொள்ளுகிறது. தலைவன் தன் தலைவியின் வீட்டிற்குச் செல்லாமல் இடையே பரத்தையின் வீட்டிற்குச் சென்று இன்புற்று மகிழ்வதை மறைமுகமாக(உள்ளுறை) அமைவதை அறிகிறோம்.

**மருத நிலத்தின் கருப்பொருள் = தலைவனின் செயல்**

பரத்தையர் வீட்டிற்குச் சென்று காமப் பசியைத் தீர்த்துக் கொள்வது, தாமரையில் உள்ள தேனை உண்டு பசி ஆற்றிய ஆண் வண்டுக்கு உள்ளுறை உவமையாக அமைகிறது.

**தலைவன் = ஆண் வண்டு ; தலைவனின் பசி = ஆண் வண்டின் சரி**

**திரையிசைப் பாடல்களில் உள்ளுறை உவமம் :**

அலைபாயுதே என்னும் திரைப்படத்தில் தலைவி தலைவனிடம் கூற நினைக்கும் தன் காதல் உணர்வை நம்பண்பாடு கலாச்சாரம் இரண்டையும் கருதி வீட்டில் நடக்கும் பொது நிகழ்ச்சியில்; தனது உள் மனநிலையை மறைமுகமாக வெளிப்படுத்துவதை உணரமுடிகிறது.

**“அலைபாயுதே கண்ணா**

**என்மனம் அலைபாயுதே**

**ஆனந்த மோகன வேணுகானமதில்**

**அலைபாயுதே கண்ணா**

**உன் ஆனந்த மோகன வேணுகானமதில்**

**அலைபாயுதே கண்ணா ஆ ஆ!"**

இறைவனை(கண்ணன்) நினைத்து பாடுவது போல் பொதுவாக தோற்றத்தை உணர்த்தி பின், தான் மட்டும் கூற விரும்பும் கருத்துக்களை உள்ளுறையாக கூறுவதை காணமுடிகிறது.

**வாழ்வே மாயம்** படத்தில் நாயகன் தன் காதலை வெளிப்படையாகக் கூறினால் நாயகி தன் மீது கோபம் கொள்வாள் என்று நினைத்து கடவுளின் முன் பக்தியால் பாடுவது போல் தன் கருத்தை உள்ளுறை உவமமாக கூறுவதை அறியமுடிகிறது.

**"தேவி ஸ்ரீதேவி உன் திருவாய் மலர்ந்தொரு வார்த்தை**

**சொல்லிவிடம்மா பாவி அப்பாவி உன் தரிசனம் தினம்**

**கிடைத்திட வரம் கொடம்மா!"**

**உள்ளுறை உவமையில் அடங்காத கருப்பொருள் - தெய்வம் :**

சங்ககாலத்தில் மக்கள் தெய்வ வழிபாட்டில் அதிக நம்பிக்கை வைத்துள்ளனர் எனவே தான் திணை கருப்பொருளில் தெய்வத்தை அத்திணைக்;கேற்ப வைத்து வழிபட்டனர் எனவே உள்ளுறை உவமத்தில் கடவுளை சேர்க்கவில்லை. இதுவே மரபு ஆகும். கடவுளின் நம்பிக்கை இயல்பான வாழ்க்கையும் வேறுபடுத்தி வைத்ததை நாம் காணமுடிகிறது.

இக்காலத்தில் இந்த வரையறையில் மாற்றம் பெற்றுள்ளதைத் திரைப்படங்களில் காணமுடிகிறது. மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் மூலம் நாம் அதை நன்கு விளக்கிக் கொள்ள முடிகிறது. இதுவே மரபு மீறல் என்பது அறிய முடிகிறது.

**உள்ளுறை உவமிக்கும் மாற்றம் :**

தொல்காப்பியர் காலத்தில் உள்ளுறை உவமத்திற்கு சில மரபுகள் வகுத்து அதன்படி எடுத்தியம்பியச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. ஆனால் இன்றைய காலகட்டத்தில் தொல்காப்பிர் கால மரபை மீறி அமைந்துள்ளதை திரையிசைப்பாடல்கள் மூலம் அறியப்படுகிறது.

**துணை நூற்பட்டியல் :**

1. ந.சுப்புரெட்டியார் , தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, பாவை பப்ளிகேஷன்ஸ் 142, ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை – 600014 – மே2012.
2. பதிப்பாசிரியர்கள் : பேராசிரியர் இரா.ஜெகதீசன், பேராசிரியர் ந.சொக்கலிங்கம்; பேராசிரியர் மு.மணிவேல்; பேராசிரியர் இரா.மோகன், பேராசிரியர் வேல்.கார்த்திகேயன் , ஐங்குறுநூறு ஆய்வுக்கோவை(இரண்டாம் தொகுதி) –- சங்க இலக்கிய ஆய்வு மையம்; மதுரை – முதற்பதிப்பு(17.12.2008).
3. தமிழண்ணல்(ப.ஆ), தொல்காப்பியம்(மூலமும் கருத்துரையும்), மீனாட்சி புத்தக நிலையம். முதல் பதிப்பு(ஏப்ரல் 2008).
4. சங்க இலக்கியங்கள் - மூலமும் உரையும் - தொகுதி 11 – அகநானூறு மூன்றாம் பகுதி – வர்த்தமானன் பதிப்பக வெளியீடு,